# தவநெறி மன்றமும் பிரம்ம ஞானியர்களும்







வெளியீடு :

**தவநெறி மன்றம்,**
36, சௌடாம்பிகா தெரு,
துறையூர் – 621 010, திருச்சி மாவட்டம்.

# நூல் வரலாறு

திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம் ஆண்டுதோறும் நடாத்தி வரும் பாதயாத்திரை இவ்வாண்டு திருச்சி மாவட்டம், துறையூர் நகரிலிருந்து, வைரிசெட்டிப்பாளையம் வரை ஸ்ரீசுவாமி நித்தியானந்தா தலைமையில் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது.

16.5.2001 புதனன்று துறையூர் காசி விசுவநாதர் ஆலயத்தில் உழவாரப்பணியும் ஐக்கிய வழிபாடும், இரவு ஊர்வலமும் சத்சங்கமும் நடைபெற்றன.

17.5.2001 வியாழனன்று துறையூரிலிருந்து புறப்பட்டு, சிக்கத்தம்பூர் பாளையம் ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயத்தில் ஐக்கிய வழிபாடும், உணவும் ஏற்பாடு செய்யப் பெற்று இரவு 7.30 மணிக்கு உப்பிலியபுரம் ஸ்ரீஇராமகிருஷ்ண மெட்ரிக்குலேஷன் பள்ளியில் உணவும் சத்சங்கமும் ஏற்பாடு செய்யப்பெற்றன.

18.5.2001 வெள்ளியன்று, உப்பிலியபுரத்தில் இருந்து புறப்பட்டு சோபனபுரம், ஈச்சம்பட்டி வழியாகக் கொப்பமாபுரி சென்று, ஸ்ரீசப்தரிஷீஸ்வரர் ஆலயத்தில் வழிபாடு நடைபெற்ற பின்னர், கொப்பமாபுரி ஸ்ரீசங்கர ஆசிரமத்தில் ஐக்கிய வழிபாடும் உணவும் ஏற்பாடு செய்யப்பெற்றன.

அன்று மாலை வைரிசெட்டிப்பாளையம் அடைந்து, வீடுகளுக்குச் சுவாமி படங்கள் அளித்து ஆராதனையும், சமபந்தி போஜனம் ஐக்கிய வழிபாடும் நடத்தி பாதயாத்திரை நிறைவுற்றது.

அது சமயம், இந்நூல்

1. தவநெறி மன்றம் – வரலாறு
2. ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் – வரலாறு
3. ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் – வரலாறு

ஆகிய வரலாறுகள் எழுதப்பெற்று வெளியிடப்படுகிறது.

உ

# தவநெறி மன்றம்

## வரலாறு

### தோற்றம் :

திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவன நிறுவனர் ஸ்ரீமத். சுவாமி சித்பவானந்தர் அவர்கள் "அந்தர்யோகம்" என்கிற புதிய ஆன்மீகப் பயிற்சியைத் தொடங்கினார்கள். அவற்றில் கலந்து கொண்ட பல அன்பர்கள், மன அமைதியும் மகிழ்ச்சியும் அடைந்தனர். துறையூர் நகரில், "அந்தர்யோகம்" நடத்தி, இப்பகுதி மக்களை ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்ல, துறையூர் திரு.பா.மு.மாரிமுத்து முதலியார் அவர்களும், ஆலத்துடையான்பட்டி வித்வான் திரு.டி.சி.ஜகந்நாத ரெட்டியார் அவர்களும், எண்ணம் கொண்டனர்.

'தவநெறி மன்றம்' என்கிற அமைப்பினை 1978 ஆம் ஆண்டு, இவ்விரு பெருமக்களும் ஏற்படுத்தினார்கள். துறையூர் செங்குந்தர் பள்ளியில், தபோவனச் சாதுக்களைக் கொண்டு, மூன்று மாதத்திற்கு ஒரு அந்தர்யோக நிகழ்ச்சி என்ற முறையில், சிறப்பாக நடத்தி வந்தனர்.

வயோதிகம் காரணமாக 1983ஆம் ஆண்டு திரு. பா.மு.மாரிமுத்து முதலியார் அவர்கள் காலமானார்கள். அதனால் தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் செயலற்றுத் தடைபட்டன. அன்பர்கள் பலரின் வேண்டுகோட் கிணங்கி, காலஞ்சென்ற முதலியார் அவர்கள் விட்டுச் சென்ற பணியினைத் திரு.எம்.சுப்பிரமணியன் அவர்கள் மேற் கொண்டார்கள்.

1985ஆம் ஆண்டிலிருந்து, மீண்டும் தொடர்ந்து 1991ஆம் ஆண்டுவரை அந்தர்யோக நிகழ்ச்சிகள் நடந்து வந்தன. ஸ்ரீசுவாமி நித்தியானந்தா, ஸ்ரீசுவாமி ஆத்மானந்தா, ஸ்ரீசுவாமி குஹானந்தா, ஸ்ரீசுவாமி பரானந்தா, ஸ்ரீசுவாமி அசலானந்தா, ஸ்ரீசுவாமி சதானந்தா, ஸ்ரீசுவாமி ஓங்காரனந்தா போன்றோர் நிகழ்ச்சிகளைச் சிறப்பாக நடத்தி, அருளுரை வழங்கினார்கள்.

## ஸ்ரீமத்பகவத் கீதை :

ஸ்ரீமத் ஓங்காரானந்தா அவர்களால் நடத்தப்பெற்ற ஒருநாள் அந்தர்யோக நிகழ்ச்சி ஒன்றில், கீதையின் முதல் அத்தியாயமும், இரண்டாம் அத்தியாயமும் சொற்பொழிவின் மூலம் விளக்கப்பெற்றன.

பின்னர் ஸ்ரீமத் பகவத் கீதையின் அனைத்து அத்தியாயங்களையும் வகுப்பாக நடத்தத் திட்டமிடப்பட்டது. சுவாமிகளிடம் விண்ணப்பிக்க அவர்களும் ஏற்றார்கள். அதன்படி 1990ஆம் ஆண்டு முதல், ஆண்டுதோறும் ஜனவரி முதல் தேதி முதல், 7ஆம் தேதிமுடிய நடத்துவதாக முடிவு செய்யப்பெற்றது. மூன்றாம் அத்தியாயத்திலிருந்து தொடங்கி, 1996ஆம் ஆண்டுவரை எட்டாம் அத்தியாயம் முடிய, மிகவும் சிறப்பாக வகுப்புகள் நடந்தன.

## உபநிஷத் :

சுவாமிகள் மாலையில் கீதைபேசிய நாட்களில், காலை வேளையில் உபநிஷத் வகுப்புகள் நடத்தினார்கள். முண்டகோபநிஷத், தத்துவ போதசாரம், கடோபநிஷத் ஆகியவை நடத்தப்பெற்றன. இந்நிகழ்ச்சிகள், ஸ்ரீவாசவி மஹால், செங்குந்தர்

மேல்நிலைப்பள்ளி, திவ்யப் பிரியா திருமண மண்டபம் ஆகிய இடங்களில் நடத்தப்பெற்றன.

## ஸ்ரீமத்பாகவதம் :

இவை தவிர, திருவேடகம் ஸ்ரீவிவேகானந்தா கல்லூரி முதல்வர் டாக்டர். திரு.க.சுப்பிரமணியன் அவர்கள் 09.05.1993 முதல் 15.05.1993 முடிய திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில், இரவு 6.30 மணிமுதல் 8.30மணி முடிய ஸ்ரீமத் பாகவதம் உபந்யாசம் செய்தார்கள்.

## ஸ்ரீமகா பாரதம் :

முதல்வர். டாக்டர். க.சுப்பிரமணியன் அவர்கள் 09.08.1998 முதல் 14.08.1998 முடிய திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில் இரவு 6.30 மணிமுதல் 8.30 மணிவரை ஸ்ரீமகாபாரதம் விரிவுரை நிகழ்த்தினார்கள்.

## நூற்றாண்டு விழா :

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்த மஹராஜ் அவர்களின் நூற்றாண்டு விழாவை ஒட்டி 21.07.1997 முதல் 29.07.1997 முடிய 9 நாட்கள் "ஸ்ரீமத் பகவத் கீதை ஸாரம்" எனும் பொருளில் சுவாமி ஓங்காரனந்தா உரையாற்றினார்கள். 30.07.1997 புதன்கிழமையன்று, துறையூர் திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில் காலை முதல் மாலை வரை, "ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் நூற்றாண்டு விழா" நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன. மாலை ஊர்வலமும், இரவு தபோவன மாணவர்கள் நடத்திய நாடகமும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீசுவாமி நித்யானந்தா, ஸ்ரீசுவாமி ஓங்காரனந்தா, ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தா, ஸ்ரீசுவாமி அம்பிகானந்தா ஆகியோர் நிகழ்ச்சிகளில் பங்குபெற்றுச் சிறப்பித்தனர்.

## திருவாசகம் :

தபோவனத் தலைவர் ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்களால் 13.07.1990 முதல், "திருவாசகம்" சொற்பொழிவு நிகழ்த்தப்படுகிறது. 1991ஆம் ஆண்டு வரை மாதம் ஒரு கூட்டம் நடந்து வந்தது. சுவாமிகளின் பணிமிகுதி காரணமாகப் பின்னர், 1992ஆம் ஆண்டு முதல், மூன்று மாதங்களுக்கு ஒரு கூட்டம் என நடைபெற்று வருகின்றது. 06.12.2000 வரை திருவாசகம் 37 கூட்டங்கள் நடைபெற்றுள்ளன. துறையூர் ஸ்ரீவாசவி மகாலிலும், தவநெறி மன்ற கட்டடத்திலும் நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

## திருவாசகம் முற்றோதல் :

துறையூர் ஸ்ரீகாசி விஸ்வநாதர் ஆலயத்தில் 27.09.1992 ஆம் நாள் காலை முதல் மாலைவரை, சிறந்த ஓதுவர்களைக் கொண்டு திருவாசகம் முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்றது.

## தவநெறிமன்றம் :

தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் தொடர்ந்து ஒரே இடத்தில் நடத்தி வர இயலவில்லை. விசேஷங்கள் நடைபெறாத நாட்களில் நமக்குத் திருமண மண்டபம் கிடைத்து வந்தது. தவநெறி மன்றத்திற்கு நிதி ஆதரங்களும் இல்லை. நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுது, அன்பர்களிடம் நன்கொடை பெற்றே நடத்தப்பட்டு வருகின்றன.

இந்நிலையில், திரு. மா.இளங்கோ அவர்கள், சௌடாம்பிகா தெருவிலுள்ள, தம்முடைய ஸ்ரீமாணிக்க விநாயகர் வளாகத்தின் மேல்மாடியில், சுமார் இலட்ச ரூபாய் செலவில் நிரந்தரக் கொட்டகை அமைத்துத்

தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் நடைபெற, இடம் இலவசமாக வழங்கியுள்ளார்கள்.

10.12.1999 முதல் மன்ற நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாக ஒரே இடத்தில் நடந்து வருகின்றன. தபோவனத் தலைவர் ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் புதுஇடத்தில் ஐக்கிய வழிபாடும், திருவாசகத் தொடர் உரையும் நடத்தித் தொடங்கி வைத்தார்கள்.

## கைவல்ய நவநீதம் :

நன்னிலம் ஸ்ரீதாண்டவராய சுவாமிகள் அருளிய கைவல்ய நவநீதம் என்கிற வேதாந்த பாடம் 30.05.1999 முதல், ஞாயிறு தோறும் மாலை 6.00 மணிமுதல் 6.45வரை, முத்தமிழ்ப்பண்ணை திரு.அரங்கராசன் அவர்களால் நடத்தப்படுகின்றது.

## பெரியபுராணம் :

சேக்கிழார் சுவாமிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராண விரிவுரை வைரிசெட்டிப்பாளையம் ஒய்வு பெற்றத் தமிழாசிரியர் புலவர். திரு.சு. சப்தரிஷி எம்.ஏ., எம்.எட்., எம்.பில்., அவர்களால் ஞாயிறுதோறும் மாலை 6.45 மணிமுதல் 7.30 மணிவரை நடத்தப்பட்டு வருகின்றது.

சொற்பொழிவுகளுக்குப் பின்னர், இரவு 8.00 மணிவரை நாமாவளி, பஜனை, ஆரதி, பிரசாதம் வழங்கல் முதலியன நடந்துவருகின்றன. வாராந்தரக் கூட்டத்திற்கு அறுபதின்மருக்குக் குறையாமல், அன்பர்களும் தாய்மார்களும் வருகை தந்து பயன் பெறுகிறார்கள்.

## அறிவுதானத் திட்டம் :

பள்ளியில் பயிலும் காலத்திலேயே, இளம்வயதில், ஆன்மீகப் பயிற்சி பெற்று மாணவர்கள் சிறந்தவர்களாக

விளங்க "அறிவு தானத்திட்டம்" என்கிற ஒரு செயல்திட்டத்தினைத் தவநெறி மன்றத்தின் ஒரு பிரிவாகச் செயல்படுத்தி வருகிறோம். தணிக்கையர். திரு.ஆ.சீராளன் அவர்கள் இத்திட்டத்தினைப் பொறுப்பாகவும், சிறப்பாகவும் செல்படுத்தி வருகிறார்கள். 23.01.1999 அன்று, திருச்சிராப்பள்ளி, ஸ்ரீலக்ஷ்யசைதன்யா அவர்களால், வைரிசெட்டிப் பாளையம் "கல்வி கற்பகம்" பள்ளியில், இத்திட்டம் தொடங்கி வைக்கப்பெற்றது.

துறையூர் வட்டத்தில் உள்ள அனைத்து உயர்நிலைப்பள்ளி, மேல்நிலைப்பள்ளி ஆகியவற்றில் பயிலும் மாணவர்களுக்கு ஆண்டுதோறும் நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. மாலை 3.00 மணிமுதல் 4.30 மணிவரை பள்ளி வளாகத்தில், இறைவணக்கம், தியானம், அறிமுக உரை, ஆன்மீகச் சொற்பொழிவு, மங்களம், சாந்தி பாடம் முதலியன நடத்தப்படுகின்றன.

கர்மயோகியாகச் செயல்படும் தவநெறி மன்றம், இப்பகுதி மக்கள் ஆன்மீக உணர்வு பெற்று, ஆனந்தமாக வாழ, தன்னுடைய பாதையில் பீடுநடை போடுகிறது. தொடர்ந்து வந்து பயன்பெற, அன்பர்களைப் பணிவுடன் அழைக்கின்றது.



தஞ்சை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்

கட்டும் 14.03.1867

வீடும் 16.09.1921

# தஞ்சை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் வரலாறு

நித்திய சுகமா யெங்கு நிலவு நற் பேற்றை யார்க்குஞ்
சத்திய மொழியா லன்று வுரைத்த சங் கரனே யின்று
முத்தியைத் தருமந் நூலைத் தமிழ்மொழி செய்த தஞ்சைச்
சத்தியப் பிரஹ்மா நந்தன் நாண்மலர் தலைமேற் கொள்வாம்.

முக்தி தரும் சோழ வள நாட்டில் காவிரி யாற்றின் கவின்மிகு சிறப்பால் செழித்தது தஞ்சை மாநகரம். அந்தத் தஞ்சை நகரம் தரணி போற்றும் ஞானியொருவரைத் தந்து உயர்ந்தது.

க்ஷத்திரிய குலத்தில் காஸ்யப கோத்திரத்தில் ஸ்ரீவெங்கடஸ்வாமிராஜு–பாப்பம்மாள் தம்பதியருக்கு வேங்கமுடையான் திருவருளால், கலி 4968 அக்ஷய வருடம் பங்குனி மாதம் 2 ஆம் நாள் (1867 மார்ச் மாதம் 14ஆம் நாள்) வியாழக்கிழமை பூர்வ பட்சமும் நவமி திதியும் திருவாதிரை நட்சத்திரமும் கூடிய நன்னாளில், சிவ சொரூபத் திருவருளே ஓர் மகவாகத் தோன்றியது. அந்த மூத்த மகனுக்குக் குப்புஸ்வாமி எனப் பெயரிட்டனர். குறிப்பிட்ட காலங்களில் அன்னப் பிராசனம் (சோறூட்டுச் சடங்கு) செய்வித்து, திருவேங்கடம் சென்று முடிக்காணிக்கை செய்து முறையாகத் தரிசனம் செய்து தஞ்சை வந்தனர். குப்புஸ்வாமிக்கு இளைய சகோதரர்கள் மூவரும், சகோதரிகள் இருவரும் இருந்தனர்.

குப்புஸ்வாமி 5 வயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்டு 12 வயது வரை தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், மராட்டி, கன்னடம் ஆகிய மொழிகளைக் கற்றுணர்ந்தனர்.

17 ஆம் வயதில் ஆங்கிலமும் கற்றுத் தாமாகவே ஹிந்தி, மலையாளம், சிங்களம், பெங்காளி முதலிய மொழிகளையும் கற்றுணர்ந்தார்கள்.

சுவாமிகளின் 12ஆவது வயதில் தஞ்சாவூர் அரண்மனை சரஸ்வதி மஹால் நூலகத்தில் "ஸ்ரீகுருகீதை" என்னும் அருமையான ஏட்டுச்சுவடி கிடைத்தது. அது முதல் உண்மையை உணரும் ஞான வேட்கையோடு இருந்தார்கள்.

இளம் வயதிலேயே இவருக்கு நிஷ்டை (தவநிலை) கூடிற்று. இரவு நேரங்களில் யாரும் அறியாதபடி தவத்தில் இருந்து வந்தார்கள். ஒருமுறை தாயார் இதனைக் கண்டு, தம் கணவரிடம் இதுபற்றிக் கூறினார். பெற்றோர் அவரது செயல் கண்டு அச்சமுற்றனர். இல்லறம் அல்லது நல்லறமன்று என்பதை நினைவுபடுத்தி, 18ஆம் வயதில் கிருஷ்ணம்மாள் என்னும் நற்குணப் பெண்மணியை, சுவாமிகளுக்குத் திருமணம் செய்து வைத்தனர்.

பத்தொன்பதாம் வயது முதல் இருபத்து மூன்றாம் வயது வரை சுமார் ஐந்தாண்டு காலம் யாருக்கும் தெரியப்படுத்தாமல் மறைவாக இருந்து வந்தார்கள். பல புண்ணிய பதிகளுக்கும் சென்று தரிசனம் செய்தனர். பின்னர் திருவிடை மருதூரில் தங்கி நாளும் ஸ்ரீமருதப்பரை தரிசனம் செய்து வந்தனர்.

திருவிடை மருதூர் அருகில் மூங்கில் வனத்தில் யாருமறியாத மறைவிடத்தில் சமாதியில் இருந்தனர். இரண்டு நாட்களுக்குப் பின் சமாதி கலைந்து, பசிப்பிணி வாட்ட வருத்தமுற்று இருந்தனர். சுவாமிகள் பசித்திருந்த பொழுது, ஒரு கிழ அந்தணர் உணவு கொண்டு வந்து, சுவாமிகளின் பசியாற்றினார். சுவாமிகள் பசிநீங்க, அக்கிழ அந்தணர் மறைந்து போயினர். ஸ்ரீ மருதப்பரே சுவாமிகளுக்காகக் கிழ

அந்தணர் வடிவில் வந்ததாக எண்ணி, திருவருளை வியந்து மகிழ்ந்தனர்.

சுவாமிகள் மூங்கில் வனத்தில் தியானத்தில் இருப்பதையறிந்த தாயாரும், தம்பியரும் வந்து, தஞ்சைக்கு அழைத்துச் சென்றனர்.

சுவாமிகளுக்கு, ஞான வேட்கை அதிகரிக்க ஞானாசிரியரையடைய விருப்பம் கொண்டனர். தஞ்சாவூர் மஹாராஜா குலகுருவின் பரம்பரையில் வந்த ஞானகுருவான ஸ்ரீ விஷ்ணு பாவா என்னும் குரு இருக்கிறார் என்பதையறிந்து, அவரை குருவாக அடைந்தனர். குருவும் மனமகிழ்ந்து சுவாமிகளின் பக்குவத்தை உணர்ந்து, தமது சீடராக ஏற்றுக் கொண்டார்கள்.

சித்ரா பௌர்ணமியன்று ஞானோபதேசம் செய்வித்தார்கள்.

சுவாமிகள் இயற்கையாகவே அவதார புருஷராகையால் ஞானபூமி ஏழினுள் நான்காவது பூமியாகிய – சத்துவாபத்தியில், இனித்தேகம் வராத விதேகமுக்தியுடைய அகண்டாகார பிரஹ்மமாய் விளங்கினார்கள்.

பின்னர், தமது குருவின் சமாதி ஆலயத் திருப்பணி செய்து முடித்தனர்.

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகள் முதலியோர் வட மொழியில் செய்த பக்தி, ஞான நூல்களைத் தமிழ் மொழியில் சுலோகார்த்தம், வியாக்யானம், டிப்பணி எழுதி, யாவரும் எளிதில் அறியும்படிச் செய்தார்கள். நூல்களைத் தம் சகோதரர்களால் அச்சிடச் செய்தனர்.

தம்மை வந்தடைந்த பக்தர்கட்கெல்லாம் உணவளித்து அவரவர் பக்குவத்திற்கும்

விருப்பத்திற்கும் தக்கவாறு கருமம், பக்தி, ஞானம், யோகம் முதலியவற்றை அன்போடு போதனைச் செய்தார்கள். வேதாந்தம், தர்க்க சாஸ்திரம் ஆகியவற்றையும் முறையாகக் கற்பித்தனர்.

சுவாமிகளின் தாயார் பாப்பம்மாள், தமது இரண்டு குழந்தைகள், மனைவி கிருஷ்ணம்மாள், சகோதரர் கோவிந்தசாமி ஆகியோர் ஒருவர்பின் ஒருவராகக் காலமானார்கள்

சுவாமிகள் தலயாத்திரை செய்ய திட்டமிட்டனர். அதுசமயம் தந்தையார், தமது வயோதிகத் தன்மையையும், தமது புத்திரன் யாத்திரை செல்ல இருப்பதையும் நினைத்து, மன வாட்டம் கொண்டிருந்தனர். அக்குறிப்பைச் சுவாமிகள் அறிந்து தந்தையிடம், அவரது சரீர அந்தியக்காலத்தில் இருந்து செய்ய வேண்டிய காரியங்களைச் செய்வதாக வாக்களித்தனர். இது கேட்டுத் தந்தையும் மனவாட்டம் நீங்கினார். இது நடந்து இருபது நாட்களில், தந்தையாரும் தெய்வ சிந்தனையுடன் ஏகாதசியன்று காலமானார். அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்குகளையும் காரியங்களையும் முறையாகத் தமது இரண்டு சகோதரர்களுடன் செய்து முடித்தனர்.

கிரஹஸ்த ஆசிரமம் முற்றுப் பெற்றதால், வானப் பிரஸ்த ஆசிரமத்தை மேற்கொண்டனர். தலயாத்திரையாக மேற்குக் கடற்கரையோரமாக உள்ள அனைத்து புண்ணியத் தலங்களையும் முறையாக சேவித்து, ஸ்ரீபஞ்சவடி (நாசிக்) யில் தங்கினார். அங்கிருந்த பிரஹ்ம ஸ்ரீநாராயண ஜோசியர் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி ஸ்ரீதேவி கீதையை அங்குள்ள பக்தர்களுக்கு உபதேசித்தார். மேற்படி நூலைத் தமிழிலும் இயற்றினார். பின்னர் அச்சு நூலாகவும் வெளியிடப்பட்டது.

துவாரகை, குருஷேத்திரம் வழியாக ஸ்ரீகாசி அடைந்து ஒரு வருட காலம் அங்கு வேதாந்த பாடம் சொல்லி வந்தனர். அங்கிருந்த உத்தம சிரேஷ்ட மண்டலீக சுவாமிகளால், ஸ்ரீபிரஹ்ம நிஷ்ட பண்டித வெ.குப்புஸ்வாமி மஹராஜ் என்னும் விருது வழங்கப் பெற்றனர். பின்னர் அங்கிருந்த யாவரும் போற்ற சீடர்களுடன் ஸ்ரீஹரித்துவார் அடைந்தனர். பெரிய மேளா என்னும் திருவிழாவில் கலந்து கொண்ட சகல சாதுக்களும் போற்றிக் கொண்டாடினர்.

தென்னாடு செய்த புண்ணியத்தால் $1\frac{1}{2}$ ஆண்டுகளில் மறுபடியும் சோழ நாட்டுத் தலங்களைச் சேவித்து இராமேஸ்வரம் வழியாக திருநெல்வேலிக்கு அருகில் உள்ள வண்ணாரப்பேட்டையில் தங்கினார். சுவாமிகளிடம் இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த பாடம் கற்றவரும், வேதாந்த நூல்களுக்கு விருத்தியுரை செய்தவருமான ஸ்ரீராமஸ்வாமி ஐயா என்பவரும், மற்ற சீடர்களும் உடன்வர திருக்குற்றாலம் சென்றனர். சாரல் காலம் முழுவதும் குற்றாலத்திலேயே இருந்து வந்தனர்.

இரங்கூன் இராமநாத ரெட்டியார் ஏஜெண்ட் தஞ்சை கோபால்சாமி பிள்ளை என்பவர் சிறந்த வித்வான். அவர் தமது குருவாகிய சுவாமிகளைத் தரிசிக்க ஆவல் கொண்டு குற்றாலம் சென்றனர். அழகிய பாமாலைகளைப் பாடி வணங்கி மகிழ்ந்தனர். பின்னர் குருவருளுடன் இரங்கூன் திரும்பினார். குற்றாலத்திலிருந்த சுவாமிகள் பழனி தரிசனம் முடித்து தஞ்சைக்குத் திரும்பினார்.

தஞ்சாவூர் கோட்டை வடக்குராஜ வீதியில் 'ஸ்ரீசங்கர விலாச சாரதா மந்திரம்' என்னும் நூல்நிலையத்தை ஏற்படுத்தி, அதில் பலராலும் உதவப்பட்ட பல மொழிகளின்றும் வெளியான நூல்களைச் சேகரித்து வைத்தனர். தம்மால் தமிழாக்கம்

செய்யப்பெற்ற நூல்களையும் மேற்படி சாரதா மந்திரத்தின் வாயிலாக அச்சேற்றி வெளியிடுவதற்கு ஸ்ரீ சங்கர விலாச சாரதா மந்திர அச்சுக்கூட இயந்திர சாலையும் அமைத்தனர். மேற்படி சாரதா மந்திரத்தில் ஸ்ரீசங்கரர், ஸ்ரீவிஷ்ணுபாவா ஆகியோர் திருவுருவப் படங்களும், யந்திர ஸ்தாபனமும் செய்தனர். நித்திய பூஜையும் விழாக்களும் நடத்த வேண்டிய முறைகளையும் அமைத்து, இவைகளைச் சரிவர நடத்தி வர அறங்காவலர்களையும் ஏற்பாடு செய்து தம்மை வந்தடைந்த பக்தர்களுக்குத் தக்கவாறு உபதேசம் செய்து, திருப்தியடையச் செய்து வந்தனர்.

சுவாமிகளின் மைத்துனரும், சகோதரியின் கணவரும், பாகவத உபந்யாசகருமான சுவாமிகளின் சீடர் வீராஸ்வாமிராஜு என்னும் பெரியார் ஸ்ரீசுவாமிகளின் ஞானாசிரியர், ஸ்ரீவிஷ்ணு பாவா அவர்களிடம், சுவாமிகளுடன் சேர்ந்து ஒரே நாளில் உபதேசம் பெற்றவர். ஆயினும் அப்பெரியார் சுவாமிகளைக் குருபீடமாக ஏற்று வாழ்ந்து வந்தனர். அவரும் சித்தார்த்தி வருடம் கார்த்திகை மாதம் காலமானார்கள்.

மூன்றாம் முறையாக சுவாமிகள் வடநாடு பயணம் மேற்கொண்டனர். அங்குத் துறவு பூண்டு, இமயமலையில் பத்ரிநாத் கேதார்நாத் முதலிய புண்ணிய தலங்களுக்குச் சென்று தரிசித்து மீண்டும் தஞ்சை திரும்பினார்கள்.

தமது உத்தம சீடர் ஒருவருக்கு, ஸ்ரீ பி.ராமாநந்த சுவாமிகள் என்னும் பெயரிட்டு, சந்யாச தீட்சை கொடுத்து, ஸ்ரீசங்கர விலாச சாரதா மந்திரத்தின் சகல காரியங்களையும் கவனித்துக் கொள்ள காரியதரிசியாக நியமனம் செய்தனர்.

தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீபாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்தின் மூன்றாம் மடாதிபதியாகவும் இருந்து பரிபாலனம் செய்து வந்தனர்.

சுவாமிகள் திருச்சி மாவட்டம் துறையூர் அருகிலுள்ள சிக்கத்தம்பூர்பாளையம் என்னும் கிராமத்தில் தங்கி, வேதாந்த பாடம் சொல்லியும் தியானம் செய்தும் வந்தார். தமது தம்பியுடன் விருத்தாசல ரெட்டியார் வீட்டில் இருந்து வந்தார். கடைசி காலத்தில் மௌனமாக இருந்து வந்தனர்.

கலி 5023 கொல்லம் 1097 துன்மதி வருடம் புரட்டாசி மாதம் முதல் நாள் 1921 செப்டம்பர் 16 வெள்ளிக்கிழமை பௌர்ணமியன்று ஸ்ரீசுவாமிகள், தமது இளைய சகோதரர் முதலான பல சீடர்களும் சூழ்ந்திருக்க, விருத்தாசல ரெட்டியார் வீட்டில் பத்மாசனத்தில் இருந்தபடியே அவதாரத் திருமேனியினின்றும் பிரஹ்ம சொரூபத்தில் ஐக்யமடைந்தார்கள்.

ஸ்ரீசுவாமிகள் சமாதியான இடத்தில் ஸ்ரீரெட்டியார் அவர்களால் ஆலயம் அமைக்கப்பட்டு ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமி மடாலயம் என்று நிர்வகிக்கப்படுகிறது. நித்ய பூஜைகளும் குருபூஜையும் சிறப்பாக நடந்து வருகிறது.

பெருவள நல்லூர் கோபால்சாமி ரெட்டியார்– சீதாலக்ஷ்மி அம்மையார் குடும்பத்தினர் மேற்படி மடாலயத்தை நிர்வகித்து வருகின்றனர்.

## தஞ்சை ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் நூல்கள்

1. ஸ்ரீபஞ்சதசி - I
2. ஸ்ரீபஞ்சதசி - II
3. ஸ்ரீ விருத்திப் பிரபாகரம்
4. அட்டாங்க யோக சூத்திரம்
5. சங்கர நீலகண்டாசாரிய சம்வாதம்
6. சுருதி ஷட்லிங்க சங்கிரஹம்
7. ஆத்ம போதமும் தத்துவ போதமும்
8. சிவயோகப் பிரதீபிகை
9. ஸ்ரீசங்கராசாரியார் சரித்திரம்
10. குரு புஜங்க ஸ்தோத்திரம்
11. ஹட யோகப் பிரதீபிகை
12. தருக்க கௌமுதியும் நியாயப் பதார்த்தம் பதினாறும்
13. அஷ்டாத்யாயீ
14. அபரோக்ஷாநுபூதி
15. பஞ்சீகரணம் முதலிய 27 புத்தகங்கள்
16. ஸ்ரீ விருத்திப் பிரபாகரம் சாரம் என்னும் விருத்தி ரத்னாவலி
17. விவேக சிந்தாமணியில் வேதாந்தப் பரிச்சேதம்
18. ஸ்ரீராமகீதை
19. ஸ்ரீகுருகீதை
20. உத்தர கீதை
21. ஸ்ரீ தேவி கீதை
22. ஸ்ரீ பகவத்கீதை முதலிய 3 கீதைகள் (கர்ம கீதை, சப்தஸ்லோகி கீதை)
23. ஸ்ரீ கணேச கீதை
24. சிவ பஞ்சாட்சார விளக்கம் குறிப்புரையுடன்

25. ஸ்ரீ சங்கராசாரியார் சரித்திரம் சங்கிரகம்
26. கைவல்ய உபநிடதம், அம்ருதபிந்து உபநிடதம், சுகரகஸ்யோபநிடதம், ஸ்கந்தோப நிடதம்
27. பிரம்ம விதாசீர்வாத பத்ததி
28. பிரச்னோத்ர ரத்ன மாலிகா
29. ஸ்ரீவைஷ்ணவ அஷ்டாக்ஷர மந்திரார்த்த சங்கரஹம்
30. தத்வமஸி மகாவாக்ய உபதேசம்
31. சிவஞான போதம்—லகுடீகை
32. சிவஞானபோதம்—தத்வப்பிரகாசிகை உரை
33. நந்தி கேசுர காரிகை
34. ஸ்ரீ நாரத பக்தி சூத்திரம்
35. ஸ்ரீ விசார சந்திரோதயம்
36. ஸ்ரீ பாலபோதம்
37. பிரம்ம நாமாவளி மாலை
38. யோகதாரா வலி
39. சர்வ ஞானோத்திரம்
40. சதாசாரம்
41. ஆத்மா நாத்ம விவேகம்
42. ஜீவன் முக்தி விவேகம்
43. நாநா ஜீவ வாதக் கட்டளை—செய்யுள்.



ஸ்ரீகுரு. மகாகோவிந்த சுவாமிகள்

| கட்டும் | வீடும் |
|---|---|
| 13.08.1908 | 30.07.1991 |

உ

# ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் வரலாறு

'குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'

## முன்னுரை :

தன்னை அறியாது, தனக்கு ஆதாரத் தலைவனையும் அறியாது சுழற்காற்றுற்ற செத்தைபோல் அலையும் அஞ்ஞானிகட்கு, உன்னை நீ அறிந்தாயாகில் உனக்கொரு கேடும் இல்லை என உபதேசித்துத் தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் காட்டி, இம்மையில் விதேகமுக்தனாக வாழச் செய்யும், குரு என்னும் நடமாடும் தெய்வங்கள் நம் தமிழகத்தில் தோன்றி, இம்மண்ணை ஞானபூமியாக்கி வளம்பெறச் செய்துள்ளன.

## பிறப்பு :

இத்தகைய புண்ணிய சீலர்களில், ஞானிகளில், நம் குரு மகா கோவிந்த சுவாமிகளும் ஒருவர். இவர் ஆண்டாள் அம்மையார் அவதாரம் செய்த ஸ்ரீவில்லிப்புத்தூரின் அருகில் உள்ள, இயற்கை எழில்மிக்க இராஜபாளையம் என்கிற சீரூரில் (விருது நகர் மாவட்டம்) பிறந்தார். இவர் பிறந்த நாள் 13.8.1908 ஆம் ஆண்டு, சதய நட்சத்திரம் கூடிய குருவாரம். தெய்வ பக்தி மிக்க சான்றோர் எ.சு.குமாரராஜா – இராஜாம்பாள் ஆகிய தம்பதியர்க்கு, க்ஷத்திரிய குலத்திலேயே சிறந்த ஞானவீரம் மிக்க நம் சுவாமிகள் பிறந்தார்.

## கல்வி:

வைணவ மரபினர் என்ற காரணத்தால், பெற்றோர்கள் கோவிந்தராஜா எனும் நாமம் சூட்டினார். கோவிந்தராஜா 5 ஆம் வயது முதல் 17 ஆம் வயது வரை சிரத்தையுடன் கற்றார். தமிழ், ஆங்கிலம், ஆகிய மொழிகளில் சிறந்த பயிற்சியும், தன் குலமொழியுமாகிய தெலுங்கு மொழியில் நல் ஞானமும் பெற்று விளங்கினார். இளமையிலேயே பக்தியும் கொண்டிருந்தார். தனித்திருந்தும், ஞானப்பசி கொண்டு விழித்திருந்தும் வாழ்ந்தார்.

## துறவு வேட்கை:

கோவிந்தராஜா இவ்வாறு வாழ்ந்து தனது 19ஆம் வயதைத் தொட்டபோது, பெற்றோர்கள் திருமணம் பற்றிய பேச்சைப் பேசினர். துறவறத்தையே தன்னுடைய தூய மனம் விரும்புகிறது என்று, பணிவுடனும், அதே சமயம் துணிவுடனும் கோவிந்தராஜா என்கிற அந்த வைராக்ய வீரர் மொழிந்தார். கேட்ட பெற்றோர்களால் ஏதும் சொல்லமுடியாமல் மகனின் எண்ணத்தை ஏற்றனர். துறவு உலகுக்கு இத்தகையதோர் தூண்டா மணிவிளக்குக் கிடைக்க இறைவனின் திருவருள் கூட்டியது. "அவன்" வழி "இவன்" துறவியாகிறான், அவ்வளவுதான்.

## துறவியாதல்:

கோவிந்தராஜா ஞானத் தேடலுடன் இராஜபாளையத்தினின்றும் புறப்பட்டார். காரைக்குடியின் அருகில் உள்ள கோயிலூர் வந்து, அங்குள்ள மடாலயத்தை அடைந்தார்.

அத்வைத ஞான பரம்பரையினரரகிய, ஸ்ரீமகாதேவ ஞான தேசிக சுவாமிகள், அங்கு குருமூர்த்தியாக இருந்து அருளாட்சி செய்து வந்தனர்.

ஸ்ரீமகாதேவ ஞான தேசிக சுவாமிகளைக் கண்ட கோவிந்தராஜா, அவருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கி அவருடைய திருவருளால் அவரை ஞான குருவாக ஏற்கின்றார். காஷாய சந்நியாசம் பெற்று, "கோவிந்தசுவாமி" எனும் தீக்ஷா நாமமும் பெறுகின்றார்.

## பாடம் கேட்டல்:

கோயிலூர் மடாலயத்தின் மரபுப்படி, அங்கு உபதேச பாடமாக அமைக்கப்பட்ட "நாநா ஜீவ வாதக் கட்டளை" முதல், "ஞான வாசிட்டம்" வரையுள்ள வேதாந்த ஞான சாத்திரங்களையும், மற்றும் உயர்ந்த நூல்களையும் உபதேசப் பாடமாகக் கேட்டார். அங்கிருந்த அசேஷ சாத்திர பாண்டித்தியமும், ஆத்ம நிஷ்டையும் உடைய, சிறந்த ஞான மூர்த்தியாகத் திகழ்ந்த, ஸ்ரீவீரநாராயண ஞான தேசிக சுவாமிகளிடம், தனக்குச் சாஸ்திரங்களில் ஏற்பட்ட சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்தார். சாத்திர பாடங்களில் தெளிவடைதலே தலைசிறந்த ஞானவாயிலாகும்.

## சமஸ்கிருதம் கற்றல்:

இப்பொழுது சுவாமிகட்கு 29ஆம் வயது. வேதாந்த ஞான சாத்திரங்களில் சிரவணம், மனனம், நிதித்தியாசனம், மகாவாக்கிய விசாரம் செய்து, தன் குருநாதரின் திருவருளால் மகிழ்ந்திருந்தார். சுவாமிக்ட்கு, வடநாட்டில் உள்ள காசி முதலிய புண்ணியத் தலங்களைத் தரிசிக்க வேண்டும் என்னும் எண்ணமும், சமஸ்கிருதம் கற்று, அதிலுள்ள வேதாந்த நூல்களைக் கற்க வேண்டும் எனும் எண்ணமும் தோன்றின. இதனைத் தன்னுடைய குருவாகிய ஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளிடம் கூறினார். அவரும் மகிழ்ந்து அனுமதியளிக்க, சுவாமிகள் காசி

சென்று கங்கை நீராடி விசுவநாதனை வணங்கி மகிழ்ந்தார்கள்.

பின்னர் சுவாமிகள் அரித்துவாரம் சென்று, அங்கு கனகல் எனும் பகுதியில் உள்ள ஸ்ரீ சூரத்கிரி மகேசுவரானந்த கிரி மண்டலேசுவர சுவாமிகளின் ஆசிரமத்தில் தங்கினார். அங்கு சுவாமிகள் சமஸ்கிருதம் பயின்றார். ஸ்ரீ பகவத் கீதை முதலிய வேதாந்த பக்தி ஞான சாத்திரங்களைக் கற்றார். அப்போது அந்த சுவாமிகளால் "கோவிந்தானந்த கிரி" எனும் நாமம் சூட்டப்பெற்றார். இவ்வாறு ஓராண்டு காலம் தங்கியிருந்தார் சுவாமிகள்.

## மடாதிபதி ஆதல்:

பின்னர் அங்கிருந்து புறப்பட்டுக் கோயிலூர் வந்தார்கள். தம் ஞான குருவாகிய ஸ்ரீமகாதேவஞான தேசிக சுவாமிகளுடன் தங்கி வேதாந்த ஞான சாத்திர ஆய்வுகள் செய்து வந்தனர்.

இது காலத்தில், தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீபாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்குத் தலைவர் ஒருவர் தேவைப்பட்டார். அதற்குத் தலைவராக இருந்த ஸ்ரீவீர. கிருஷ்ண சுவாமிகள் தமது முதுமையை எண்ணி கோயிலூர் மடாலயக் குருமூர்த்திகளிடம் தெரிவித்தார்.

இதைக் கேட்ட ஸ்ரீமகாதேவ ஞான தேசிக சுவாமிகள், கரந்தை மடத்திற்குத் தகுதியானவர், தமது தலைமைச் சீடர் கோவிந்தசுவாமிகளே எனத் தெளிந்து நம் சுவாமிகளை அனுப்பி வைத்தார்கள். நம் சுவாமிகள் தம் குருவின் அருளால் 16.9.1942 ஆம் நாள் தஞ்சாவூர் கரந்தை பாலைய சுவாமிகள் மடாலயத் தலைவராகப் பொறுப்பேற்றார்.

சுவாமிகள் அம்மடாலயத் தலைவராகி பூசனைகளையும், போதனைகளையும் சிறப்பாக ஆற்றி வந்தனர்.

அப்பொழுது தஞ்சையில் இருந்த சிறந்த பேராசிரியர்கள், மற்றும் ஆன்மீக அன்பர்களுடன் சுவாமிகளுக்கு நல்ல தொடர்பு ஏற்பட்டது. மடம் எப்பொழுதும் சத்சங்க இடமாகவே இருந்தது.

## ஏகாம்பரக் குப்பம்பேட்டை செல்லுதல்:

காசி வாசி ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் என்பவர், சித்தூர் மாவட்டம், ஏகாம்பரக் குப்பம்பேட்டையில் ஒரு சிறந்த மடாலயம் அமைத்துத் தலைவராக இருந்தனர். தமது உபாசன மூர்த்தியாகிய ஸ்ரீசிவசுப்பிரமணிய சுவாமியின் பெயரால் அம்மடாலயம் திகழ்ந்தது. அவர், நம் சுவாமிகளின் குருதேவரின் உடனிருந்தவர். மிகச் சிறந்த ஞானி. வேத மொழிபெயர்ப்பு ஆசிரியர். அவர் சமாதி அடைந்ததும், 1948 ஆம் ஆண்டு நம் சுவாமிகள், அந்த ஸ்ரீசிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் திருமடத்திற்குத் தலைவரானார். அதனால் தஞ்சாவூர் மடத்திற்குத் தலைவராக ஸ்ரீமகா வாசுதேவசுவாமிகளை நியமித்தார்கள்.

ஆந்திர மாநில ஏகாம்பரக் குப்பம் பேட்டை மடாலயம் மிகவும் சிறப்பாக முன்னேறியது. ஆந்திர மாநிலத்திலும் பல அன்பர்களுக்கு வேதாந்த போதனைகளைச் செய்து வந்தார். தெலுங்கு மொழியில் பாண்டித்யம் பெற்றதால், பல இடங்கட்குச் சென்று சொற்பொழிவுகள் ஆற்றி வந்தார்கள்.

## மீண்டும் தஞ்சாவூர் வருதல்:

1956 ஆம் ஆண்டு, தஞ்சையில் ஸ்ரீமகா வாசுதேவசுவாமிகள் சமாதி அடையவே, மீண்டும் நம் சுவாமிகள் தஞ்சைக்கே வரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஏகாம்பரக் குப்பம் பேட்டையில், மிகச் சிறந்த அன்பரும், சுவாமிகளின் சீடராகவும் இருந்த

திரு.வெங்கடேச முதலியாரைப் பவர் ஏஜண்டாக நியமித்துவிட்டுச் சுவாமிகள் தஞ்சைக்கு வந்தார். தஞ்சை மடாலயத்தைப் புதுப்பித்து மிகவும் சிறப்பாக நிர்வாகம் செய்து வந்தார்கள்.

## நன்னிலம் ஸ்ரீதாண்டவேசுவரசுவாமிகள் சமாதி ஆலய திருப்பணி :

வேதாந்த ஞான சாத்திரங்களின் சாரமான விஷயங்களைச், சாதனம் முதல் சாத்தியம் வரை முறையாகக் கூறுவதும், ஆத்மப் பிரம்ம ஐக்கிய ஞானமடைந்த ஞானிகளால் "சிறந்த ஞானநூல்" எனப்போற்றப் பெற்றதுமாகிய, "கைவல்ய நவநீதம்" என்னும் ஞான நூலைச் சாதகர்கள் நன்கு புரிந்துகொள்ள வேண்டும் என சுவாமிகள் விரும்பினார்கள்.

அக் கைவல்ய நவநீத நூலின் ஆசிரியர் ஸ்ரீதாண்டவேசுவர சுவாமிகளின் சமாதி ஆலயம், தஞ்சை மாவட்டம் நன்னிலத்தில் சீர்குலைந்து காணப்பட்டது. ஸ்ரீதாண்டவேசுவர சுவாமிகளின் ஞானகுரு ஸ்ரீநாராயண ஞானதேசிக சுவாமிகளின் சமாதியும் சீர்குலைந்து காணப்பட்டது. இவைகளின் திருப்பணியை இந்து அறநிலையத்துறை ஏற்றுச் செய்வதாகத் திட்டமிட்டிருந்தது. நம் சுவாமிகள் இந்து அறநிலையத்துறையினரைச் சந்தித்துப் பேசி, தானே முன்னின்று திருப்பணிகள் செய்வதாக ஏற்றுக் கொண்டு, அதன் தர்மகர்த்தாவாக நியமனம் செய்யப் பெற்றார்கள்.

இப்பணியைத் தலைமேற்கொண்ட காரணத்தால், தஞ்சாவூர் ஸ்ரீபாலைய ஞானதேசிக சுவாமிகள் திருமடத்திற்குத் தமது சீடராகிய ஸ்ரீ மு.கோ.கிருஷ்ணசுவாமிகளைத் தலைவராக நியமனம் செய்தார்கள்.

1959 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்திலிருந்து, நன்னிலம் சென்று ஸ்ரீதாண்டவேசுவர சுவாமிகள் சமாதி ஆலயத்திருப்பணிகளில் ஈடுபட்டார்கள் நம் சுவாமிகள்.

## கொப்பமாபுரி வருகை

ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகள் சமாதி ஆலய திருப்பணியில் ஈடுபட்ட சுவாமிகள், பல அன்பர்களிடமும் நிதியுதவிப் பெற்று சீரும் சிறப்புமுடன் திருப்பணி செய்து வந்தார்கள். திருச்சி மாவட்டம், கொப்பமாபுரியில் வாழ்ந்த, ஆன்மீகச் செல்வரும், கொடையாளருமாகிய திரு.நடராஜ ரெட்டியார் திருமதி ருக்மணி அம்மையார் ஆகிய தம்பதியர்களிடம் நிதியுதவி கேட்டு நம் சுவாமிகள் வந்தார்கள். சுவாமிகளின் ஞானத் தெளிவை உணர்ந்த தம்பதியர், நிதியுதவி செய்ததுடன், சுவாமிகளைத் தங்கள் இடத்திலேயே தங்கி, ஞான பாட உபதேசம் செய்ய வேண்டும் எனக் கேட்டனர்.

நன்னிலத்தில் ஆலயத்தின் திருப்பணியையும், கைவல்யநவநீத மண்டபத்தின் திருப்பணியையும் நிறைவுசெய்து 4.9.1968 ஆம் நாள் கும்பாபிஷேகம் செய்து முடித்தார்கள்.

பின்னர் சுவாமிகள் நன்னில ஆலயத்தில் பூசனைகளும், குருபூஜை விழாக்களும் எப்பொழுதும் சிறப்பாக நடைபெற ஏற்பாடுகள் செய்தார்கள்.

பின்னர், நம் சுவாமிகள் 1970 ஆம் ஆண்டு ஜூன் மாதம் கொப்பமாபுரிக்கு வருகை தந்தார்கள். கொப்பமாபுரியிலேயே தங்கினார்கள். திரு.நடராஜ ரெட்டியார் – திருமதி.ருக்மணி அம்மையார் தம்பதியினர்க்கு வேதாந்த பாடங்களைப் போதித்து வந்தார்கள். ஸ்ரீஇராம ஆசிரம் அமைத்து, அதிலேயே ஏகாந்த வாசமாய் ஆத்மானு சந்தான தியானம் செய்து வந்தார்கள்.

மற்றும் தன்னைச் சார்ந்த சீடர்களுக்கெல்லாம் வேதாந்த பாடம் சொன்னார்கள்.

கொப்பமாபுரியின் மேற்குப் பகுதியில் உள்ள வைரிசெட்டிப்பாளையத்திலிருந்து பல அன்பர்கள் சுவாமிகளிடம் வந்து வேதாந்த பாடம் கேட்டனர். சுவாமிகளின் தலையாய சீடர்கள் சிலர், வைராக்கிய ஆத்மஞான அப்பியாசம் செய்து, ஆத்மஞான நிலைகண்டு, சிறந்து விளங்குகின்றனர். வேதாந்தப் பொக்கிஷமாகிய கைவல்ய நவநீத பாடம் சொல்லுமளவிற்கு ஞானம் பெற்றுள்ளனர்.

சுவாமிகள் இங்கிருந்து பல நல்ல நூல்களையும் இயற்றினார்கள். அவைகளில் சில.

1. நாநாசீவ வாதக்கட்டளை. பதப்பொருள். (தொகுப்பு நூல்)
2. மகாவாக்கிய விசாரம்.
3. மகா வாக்கிய விசார சங்கிரகம்.
4. காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால், காரிய காம மரண நீக்கம்.
5. சர்வ துக்கமுறும் காரண வரிசையும், சர்வ துக்கமறும் காரண வரிசையும்.
6. சிந்முத்திரார்த்தம்.
7. மனிதன் எக்காரணத்தால் உயர்ந்தவன்.
8. ஸ்ரீவீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் திருவெம்பாவையும், திருப்பள்ளி எழுச்சியும்.
9. ஸ்ரீவீரசேகர ஞான தேசிக சுவாமிகள் சரிதம். (அந்தாதிக் கவிகள்)
10. ஏகாம்பரக் குப்பம் பேட்டை ஸ்ரீவீரசிவானந்த யதீந்திர சுவாமிகள் சரித்திரம்.

இவைகளன்றி, அநேக இதழ்களுக்குச் சுவாமிகள் எழுதிய வேதாந்தக் கட்டுரைகள்.

சுவாமிகட்கு தமிழ் கூறும் நல்லுலக வேதாந்த ஞானிகள் அளித்த விருதுகள் :

1. அத்வைத சித்தாந்தப் பிரகாசகர்.

2. வேதாந்தப் பேராசிரியர்.

ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகளின் 80 ஆம் ஆண்டு நிறைவு 13.8.1988 ஆம் நாள் சனிக்கிழமை மிகவும் சிறப்பாக நடந்தது.

அதுபோழ்து, அவரது சீடர்கள் சுவாமிகளின் ஞான அனுபவ அற்புதங்களைப் போற்றி, அவரது திருவடிகட்குக் காணிக்கையாக்கிய மலர் "மகாகோவிந்தம்".

## சமாதி கோயில்

பின்னர் சுவாமிகள், ஸ்ரீஇராமாசிரமத்திற்கு அருகிலேயே ஸ்ரீசங்கர ஆசிரமம் அமைத்தார்கள். ஜீவன்முக்த நிலையில் வாழ்ந்து, தியானித்தலும் போதித்தலும் தம் கர்மமாகக் கொண்ட அந்த ஞானி, பிரஜோத்பதி வருடம், ஆடி 14 ஆம் நாள் செவ்வாய்க்கிழமை, கிருஷ்ணபட்சம், சதுர்த்தி திதி, பூரட்டாதி நட்சத்திரம் (30.7.1991) அன்று சமாதி நிலை கண்டு, ஸ்ரீசங்கர ஆசிரமத்தில் அருவுருவத் திருமேனியாகிய, லிங்கத் திருமேனி கொண்டு அருள்செய்து வருகிறார்கள்.

ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் என்கிற வேதாந்த ஞான ஜோதி; நம் மண்ணில், நம்முடன் தங்கி, வேதாந்த சொரூபப் பேரொளியில் கலந்து, இன்றும் நம் அஞ்ஞானம் அகல அருள்புரிவது, நாம் பெற்ற பெரும் பேறு.

ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் சமாதி உள்ள ஸ்ரீசங்கர ஆசிரமத்தையும், அவர்கள் தங்கி தவமியற்றி

பாடம் போதித்த ஸ்ரீஇராம ஆசிரமத்தையும், கொப்பமாபுரி பெரியபண்ணை திருமதி. ஆர்.யசோதை அம்மாள் அவர்கள் நிர்வகித்து வருகிறார்கள்.

ஆசிரமத்தில் நித்திய பூஜையும், குருபூஜையும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

சுவாமிகள் சேமித்து வைத்துப் படித்துப் போற்றி வந்த இலக்கண, இலக்கிய, வேதாந்த நூல்கள் அனைத்தும், சுவாமிகள் பிறந்த ஊரான இராஜபாளையத்திலுள்ள ஸ்ரீமதி லிங்கம்மாள் வேதாந்த பிரதிஷ்டா என்ற நூலகத்தில் முறையாக வைக்கப்பட்டு, அன்பர்கள் பயனடைந்து வருகிறார்கள்.

தன்னையுந் தனக்கா தாரத்
  தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் தானாய்ப்
  பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னை நீ அறிந்தா யாகில்
  உனக்கொரு கேடு மில்லை
என்னை நீ கேட்கை யாலே
  ஈதுப தேசித் தேனே.

– கைவல்ய நவநீதம்.



# தவநெறி மன்றம்

ஞாயிறு தோறும் மாலை மணி 6 முதல் 8 வரை துறையூர் – 36, சௌடாம்பிகா தெரு, ஸ்ரீமாணிக்க விநாயகர் வளாகம் மேல் மாடியிலுள்ள தவநெறி மன்றத்தில்,

நன்னிலம் ஸ்ரீதாண்டவராய சுவாமிகள் அருளிய **கைவல்ய நவநீதம்** என்கிற வேதாந்த பாடம் முத்தமிழ்ப்பண்ணை திரு.**அரங்கராசன்** அவர்களும்,

சேக்கிழார் சுவாமிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராண விரிவுரை புலவர் திரு.**சு.சப்தரிஷி** எம்.ஏ., எம்.எட்., எம்.பில்., அவர்களும் நடத்துகிறார்கள்.

பின்னர் நாமாவளி, பஜனை, ஆரதி, பிரசாதம் வழங்கல் முதலியன நடந்து வருகின்றன. அன்பர்களும் தாய்மார்களும் வருகை தந்து ஆனந்தமாய் இருங்கள்.

செயலாளர் :
**எம்.சுப்ரமணியன்,**
"தவநெறி மன்றம்",
126, உயர்நிலைப்பள்ளி சாலை, துறையூர் – 621 010.
✆ 22654, 22449.

வாஞ்சி, துறையூர். ✆ 43638